உ

ஸ்ரீ பெண்ணாட்சியம்மன் துணை.

திரிசிரபுரத்தைச் சார்ந்த

தென்னூரில் திருக்கோவில்கொண் டெழுந்தருளிய

# ஸ்ரீ பெண்ணாட்சியம்மன்

## தோத்திரப்பா மாலை.

வீரப்பசுவாமி பதிகம், நம்பியப்பர்சுவாமி பதிகம்,

மதுரைவீரசுவாமி பதிகம்,

மலையாள முத்தையாபேரில் பதிகம்.

பலதேவர் துதி, பல சிறப்புத்தனி

முதலியவை அடங்கியுள்ளன.

இவை

நந்தமாநகர்

மகா-ா-ா-ஸ்ரீ

வ. வீ. வீரியப்பெருமாள் செட்டியாரவர்கள்

இயற்றியதை

திருச்சி, பாலக்கரை

ஸ்ரீமான் ம. மு. முத்துச்சாமி செட்டியார் குமாரர்கள்

பொன்னுச்சாமி செட்டியார் அவர்கள்

துரைசாமி செட்டியார் அவர்கள்

பொருளுதவியைக்கொண்டு

திருச்சி

...லை அச்சுக்கூடத்தில்

...க்கப்பெற்றது.

1928

ஸ்ரீ பெண்ணாட்சியம்மன் துணை.

திரிசிரபுரத்தைச் சார்ந்த

தென்னூரில் திருக்கோவில்கொண் டெழுந்தருளி!!!

# ஸ்ரீ பெண்ணாட்சியம்மன்

## தோத்திரப்பா மாலை.

வீரப்பசுவாமி பதிகம், நம்பியப்பர்சுவாமி பதிகம்,

மதுரைவீரசுவாமி பதிகம்,

மலையாள முத்தையாபேரில் பதிகம்.

பலதேவர் துதி, பல சிறப்புக்கவி

முதலியவை அடங்கியுள்ளன.

இவை

நந்தமாநகர்

மகா-ள-ள-ஸ்ரீ

வ. வீ. வீரியப்பெருமாள் செட்டியாரவர்கள்

இயற்றியதை

திருச்சி, பாலக்கரை

ஸ்ரீமான் ம. மு. முத்துச்சாமி செட்டியார் குமாரர்கள்

பொன்னுச்சாமி செட்டியார் அவர்கள்

துரைசாமி செட்டியார் அவர்கள்

பொருளுதவியைக்கொண்டு

திருச்சி

ஜனானுகூல அச்சுக்கூடத்தில்

பதிக்கப்பெற்றது.

1928

உ

பரம்பரை வித்துவகுலத்தினரும், செந்தமிழ்ப் புலவரும்,
திருச்சி பிஷப்ஹீபர் கலாசாலைத் தமிழ் லெக்சரரும்,
திரிசிரபுரம் வித்துவானுமாகிய

அமிர்தம் சுந்தரநாதனூர் அவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்



---

பூமேவு சிரபுரத்துத் தென்னூரிற் றிருக்கோயில்
[illegible]பொருந்தி வாழும்
மாமேவு பெண்ணாட்சி யம்மனடித் தாமரைக்கு
மனத்தி னன்பால்
தேமேவு நத்தநகர் வணிககுலன் வீரப்பச்
செம்மல் பெற்ற
பாமேவு தமிழுயர்வீ ரியப்பெருமாள் ஒருமாலை
பாடி னானல்

பாட்டெல்லாம் பத்திரசந் தளையெல்லாம் சொல்லிசைகள்
பண்பார்ச் சேர்ந்த
கூட்டெல்லா மலங்காரங் கோளெல்லாஞ் சன்மார்க்கங்
குணமா வேண்டி
நாட்டெல்லா நன்னயங்கள் நற்பொருள்கள் நல்லிசைகள்
நாவின் வன்மை
ஈட்டெல்லாங் கொழிக்கும்வீ ரியப்பெருமாள் கவிக்கிணையா
ரியம்பு வோமே. 2

---

நத்தமென்னும் ஏரிசை மாநகர் வேலாயுதம் ஆச்சாரியார் குமாரர்

## V. கந்தசாமி ஆச்சாரியார் அவர்கள் இயற்றிய

## சாற்றுக்கவி.

---

திங்கண் முடி தங்குசிவ சங்கர னிலங்கிடுந்
தென்பாண்டி நாட்டி னொரு சார்
சீரிலகு திருவே ரிசைப்பதியின் வணிக குல
திலகனும் வீரப்ப வேள்
மங்கள நிறைந்துகுல முய்ந்திட வுகந்துதவு
மைந்தனென வந்த புகழோன்
மாரியொப் புறவான வீரியப் பெருமாள்
மகிழ்ந்தோது நூற்கள் பலவாம்
இங்கிவ னுகந்துதவு பெண்ணுச்சி யம்மனுக்
கினிமைதரு மாலை யொன்றும்
ஏரிசைப் பதிமேவு மாரிதோத் திரமாலை
எனுமொன்று முலகுய்யவே
சங்கையறு நூலுதவு கர்வபங் கப்பொருள்கள்
தமையெலாஞ் சேர்த் தோதுநூல்
தாரணியின் மூன்றுமுக் கனிகளா யுலவுமிவை
தமையறிந் துல கோதுமே. 1

---

## கலி விருத்தம்.

திங்களைச் சூடிய செஞ்சடை யீசனை
சங்குகைத் தாங்கிய தாமரைக் கண்ணனைப்
பங்கயப் பொகுட்டனைப் பகரறு முகத்தனை
ஐங்கரக் கடவுளை அடிபணிந் தேத்துவாம்.

## நூற்பயன்.

எண்ணிய பொருள்கை கூடும் யின்பமும் ஞான முண்டாம்
மண்ணினிற் கீர்த்தி யுண்டாம் மாபெரும் புகழு முண்டு
விண்ணவர் வாழ்த்த லுண்டு விரும்பிய செல்வ முண்டாம்
பெண்ணினிற் பெருமை வாய்ந்த பெண்ணாட்சியைப் பாடுவோர்க்கே.

## ஆக்கியோன்

நன்னகர் நத்தம் வாழும் நலம்பெரு வணிகர் வம்சம்
தென்னவ ராயர் கோத்ரம் தேர்ந்தவீ ரப்பன் மைந்தன்
வின்னமில் புலவர் நேசன் வீரியப் பெருமா ளென்று
நன்னய மிகுந்தா னிப்பெண் ணாட்சிமேற் கவி செய்தானே.

## சபையோர் வணக்கம்.

கற்பக நாடு நாணும் களிப்புள நத்தம் வாழும்
விற்பனர் வேந்தர் நேசன் வீரியப் பெருமாள் செட்டி
கற்றறி வில்லா நாயேன் கவிதனைக் கற்றோர் பார்த்து
எப்பிழை யிருந்திட் டாலு மினிதினின் மகிழ்வர் மாதோ.

## ஷ சபை வணக்கம்.

பரம்பரை யாக வந்த பாவலர் தம்போ லன்றி
தரந்தெரி யாத யானும் சாற்றுபா மாலை தன்னில்
குறைவுக ளிருந்த போதும் குணமெனக் கொண்டு வாழ்த்தி
திறமிகு கவிஞ ரெல்லாம் சிறப்புடன் பொறுத்தாள் வீரே.

## ஷ சபை வணக்கம்.

முப்பத்து மூன்று தெய்வ முறை தெரியாத யானும்
செப்பிய பாடல் தன்னில் சீர்தளை மோனை யில்லாத்
தப்பித மிருந்த போதும் தயவுடன் கருணை கூர்ந்து
ஒப்பியே இந்நூற் றன்னை உண்மையி லுணர்வீர் மாதோ.

## நூற் டச ன்ன காலம்.

பிரபவ வருடம் ஆடி பேர்பதி னெட்டாம் தேதி
விரதமேநான் பியற்றி யானும் விநாயகர் கிருபை யேற்று
திறமிகு முப்பான் மூன்று தேவர்மேற் பாடல் சொல்ல
கரமைந்து முடையோ னான கணபதி காப்புத் தானே.

உ

6



தென்னூர்

# ஸ்ரீ பெண்ணாட்சி யம்மன்

## தோத்திரப்பா மாலை.

---

வல்லவர் வாய்மை யுள்ளோர் வளம்பெறு தென்னூர் வாழும்
சொல்லொணாத் தேவர் போற்றும் சோதி சுந்தரியே வாலை
நல்லபெண் ணாக்ஷி மாலை நான்சொல நாதர் மைந்தன்
வல்லபை மணாள னான வரதனுங் காப்புத் தானே.

சீர்பெறு பெண்ணாக்ஷி யுந்தன் றிருவடி பணிந்த பேர்க்கு
பேர்பெறு கல்வி வெற்றி பெருமை நல் லறிவு ஊக்கம்
ஏர்வலி புகழ் பொன் வாணாள் யிளமை நன்னுகர்ச்சி மக்கள்
நேர்புவி மின்னோ யின்மை நிறைசெல்வம் ஈரேட் டீயே

பேர்பெற்ற பெரிய ணாக்ஷி பெரியக்கா ளரிய ணாக்ஷி
சீர்பெற்ற பச்சை ணாக்ஷி சிறந்தபிச் சாயி அம்மன்
தார்பெற்ற நல்ல தங்காள் தவநிறை நல்ல கண்ணு
தேர்பெற்ற கன்னி மாரை தெரிசித்தேன் காத்தாள் வாயே

தென்னவ ராயர் கோத்ரம் சீர்பெற அவத ரித்த
பெண்ணாக்ஷி யம்மை யுந்தன் பேர்பெறு மக்க ளுக்கு
எண்ணிய செல்வம் தந்து இணையிலா மக்கள் தந்து
மன்னவர் போற்ற நாளும் மைந்தரைக் காத்தாள் வாயே

தாயினு மினிய ளான தயாபரி பெண்ணாக்ஷி தாயே
நாயினும் கடைய னான நல்லறி வில்லாப் பேயேன்
வாயினா லுன்னை வாழ்த்தா வன்மனக் கொடியே னுக்கு
சேயொடு செல்வந் தந்து சிறியனைக் காத்தாள் வாயே.

மஞ்சுசூழ் தென்னூர் தன்னில் மாபெருங் கோவில் வாழும்
கொஞ்சிய முப்பத் துமூன்று குலதெய்வம் கும்பிட் டேத்தும்
அஞ்சுகோத் திரத்தா ருக்கும் அன்புள அடியா ருக்கும்
நெஞ்சினில் நினைத்த தெல்லாம் நிமிஷத்தில் தருது வாயே.

மன்னவர் மற்றோர் போற்றும் தென்னவ ராய கோத்ரம்
அன்னவர் குலம்வி ளங்க அருந்ததி தனக்கொப் பான
பெண்ணாக்ஷி யம்மை யென்று பேர்பெற்ற தெய்வ மாகி
தென்னூரில் விளங்குந் தாயே சேயனைக் காத்தாள் வாயே.

தந்தைதாய் தமய னில்லை தனிமையாய்த் தயங்கு கின்றேன்
பந்தமாம் வலையிற் சிக்கிப் படுந்துயர் பகரொணாது
சந்தையின் கூட்டம் போன்ற ஜகத்தினர் தன்னை நம்பி
சிந்தையும் நொந்தி டாது சிறியனுக் கருள்செய் வாயே.

பெற்றதாய் பிதாவுக் கேனும் சிறுதொண்டு செய்தே னல்லேன்
பற்றிலான் தாளைப் போற்ற பாக்கியம் செய்தே னல்லேன்
உற்றவர் தமக்கு நாளும் உண்மையா யுளைத்தே னல்லேன்
நற்றவர் பாதம் போற்றா நாயெனைக் காத்தாள் வாயே.

என் மனக் கவலை நீக்கி யிணையிலா மக்கள் தந்து
பொன்னொடு பொருளுந் தந்து புகழொடு வாழச் செய்து
நன்ம்தி யுள்ளோர் நேசம் நாளுமே வளரச் செய்து
தென்னூரில் வாழுந் தாயே தீயெனைக் காத்தாள் வாயே

இந்திர ஜாலம் போன்ற யிவ்வுல கத்தின் வாழ்வைச்
சொந்தமா யெண்ணி யானுஞ் சொல்லொணாத் துயரக் தாழ்ந்தேன்
மந்தமா மடையர் போலும் மலரடி மறந்தே னம்மா
யெந்தனை மனம்பொ றுத்தே யெளியெனைக் காத்தாள் வாயே

பெற்றதா யுனைம றந்து பேருல கத்தில் யானுஞ்
சுற்றமே பெரிதா யெண்ணித் தொண்டுசெய் வேலை யாகப்
பெற்றம்போ லலைந்து யானும் பேசொணாத் துயரத் தாழ்ந்தேன்
கற்றவர் வாழுந் தென்னூர் கன்னியே காத்தாள் வாயே

உந்தனை மறந்து யானு முலகத்தில் வேறு தெய்வஞ்
சிந்தையில் நினைந்து கொண்ட சீரிலாச் சிறியே னுக்கு
மைந்தனில் லாது யானும் மனத்துய ரடைந்தே னம்மா
வந்தனஞ் செய்தே னம்மா யெந்தனுக் கருள்செய் வாயே

தண்ணீரில் விளக்கெ ரிந்த தன்மையைத் தரணி யோர்கள்
உண்மையா யெண்ணி நாளும் உன்றிரு வடியைப் போற்றும்
தண்மைசேர் தனய னுக்கு தாழ்விலா ஆயுள் தந்து
பெண்மணி வாழுந் தென்னூர் பெண்ணைக்ஷி காத்தாள் வாயே.

கும்பியின் கொடுமை யாலே கோளுரை பலவும் பேசி
அம்புவி யெல்லாஞ் சுற்றி அளவிலாப் பேரம் செய்து
வெம்பியேன் னுள்ளம் நொந்து வியாதியால் மேனி வாடி
நம்பினேன் எனக்கு நல்ல லாபமும் தந்தாள் வாயே.

தூராத கும்பி யாலும் சொல்லொணு வியாதி யாலும்
மாறுத மிடியி னாலும் மனத்துய ரடைந்தே னம்மா
பாராது போலி ராமல் பாவியேன் பிழைபொ றுத்து
தீராத மிடிநோய் போக்கித் தீயெனைக் காத்தாள் வாயே.

கைதனிற் பொருளுண் டாக கால்தனில் வலுவுண் டாக
மெய்தனில் பெலனுண் டாக மேனியிற் றேசுண் டாக
மைவிழி மனையா ளுக்கு மைந்தனுண் டாக நல்ல
செய்தொழிற் சிறப்புண் டாக சீக்கிரம் செய்வாய் தாயே

காலையி லெழுந்து நாளுங் கங்கையில் ஸ்நானம் செய்ய
மேலையோர் செய்த வண்ணம் மேன்மையாம் பூசை யாற்ற
மாலைநே ரங்க டோறும் மாபெருங் கோவில் சுற்றி
ஆலமுண் டோனைப் போற்ற அநுக்ரக மருள்வாய் தாயே

கஞ்சமா மலரில் வாழுங் கலைமகள் புருட னாலே
பஞ்சமா பாவஞ் செய்யும் பஞ்சமன் வயிற்றி லென்னை
கொஞ்சிய குழந்தை யாக குடம்பையிற் படைத்தி டாது
பஞ்சின்மெல் லடிய தாயே பார்துகாத் தருள்செய் வாயே.

ஆதியிற் சைவ னாக ஆகமந் தெரிந்தோ னாக
நீதியைத் தெரிந்தோ னான நிருபனாய் நீநி லத்தில்
கோதிலா வணிகஞ் செய்யுங் குணமுள வணிக னான
சாதியிற் படைக்கச் செய்வாய் தயாபரி காத்தாள் வாயே

குருடுகூன் செவிடு பேடு கோர்துள பிறவி நீக்கி
மருவிலாப் பிறவி யாக மானிட ஜென்மந் தன்னில்
அறிவுறு கல்வி மானுப் அவதரித் திடவே செய்வாய்
திருவுறு தென்னூர் வாழும் திகம்பரி காத்தாள் வாயே.

சிறந்ததோர் பாடல் பெற்ற திவ்வியச் சேத்தி ரத்தில்
பிறந்திடச் செய்ய வேண்டும் பெரியனு யகிபெண் ணாக்ஷி
மறந்திடக் கூடா தம்மா மைந்தனை மனதில் வைத்து
வரந்தர வேண்டு மம்மா வந்தெனைக் காத்தாள் வாயே.

பிறந்து பின் னிருந்து பின்னல் இறந்திடாச் சாயுச்சியும்பெற்று
பிறந்திடா திருக்கச் செய்வாய் பெரியனு யகிபெண் ணாக்ஷி
தறந்தெரி யாத யானும் சாற்றிய பாட லெல்லாம்
நிறைமொழி யாகக் கொண்டு நீடூழி வாழ்விப் பாயே.

பிறந்துயான் வளரும்போது பெருஞ் செல்வம் கல்வி ஞானம்
இறந்தவர்க் கிலையென் னுது யீகையாய்க் கொடுக்க வேண்டும்
சிறந்தவர் வாழுந் தென்னூர் தேவிபெண் ணாக்ஷி யம்மே
வரமது தந்து நாளும் வாகுடன் வாழ்விப் பாயே.

சத்திரம் தண்ணீர்ப் பந்தல் சாதுசேர் மடந்த டாகம்
பத்திசெய் கோவில் கூபம் பலர்க்குப காரஞ் சோலை
நித்திய அன்ன தானம் நிறைதவ அடியார்க் கீய
பத்தினித் தாய்பெண் ணாக்ஷி பாடுவோர்க் கருள்செய் வாயே.

இருமணப் பெண்டீர் நேசம் இருந்திடா தெனக்கு நல்ல
ஒருமன துடைய ளான ஒண்டொடி மனையாள் நேசம்
பெருகிடச் செய்ய வேண்டுங் பேர்பெற்ற பெண் ணாச்சியே யுன்
திருவடி பணிகி லாத நீயெனைக் காத்தாள் வாயே.

ஞானமுங் கல்வி வேண்டும் நற்றிடம் அருள வேண்டும்
தானமும் தவமும் வேண்டும் தற்பா னருளும் வேண்டும்
வானவர் நாடு நாளும் வழிதிறந் திருக்க வேண்டும்
ஊனமில் லாக்கை தந்து உருதியாய்க் காத்தாள் வாயே.

கொண்டதோர் கணவன் றுஞ்சக் கொடுங்கலி காலந் தன்னில்
மண்டுசெந் தணலில் பாய்ந்து மாலையிட் டோனைப் போற்றி
அண்டர்கள் புகழுந் தெய்வ மாகிய பெண்ணாக்ஷி அம்மை
பண்டுமழ கற்பன் னூர்போல் பாதுகாத் தருள்செய் வாயே.

கண்களு மழுங்கி டாமல் காதுகள் செவிடு றாமல்
வண்ணவாய் குழறி டாமல் வாக்கது பிசகி டாமல்
திண்ணிய தோள்க ளிரண்டும் திறமது குன்றி டாமல்
பெண்மணி பெண்ணுச் சிதாயே பேரருள் செய்கு வாயே

அண்ணலார் பாகம் பெற்ற அன்பினிற் பிரியா ளம்மை
கண்ணகி வந்தி யம்மை காரைக்கா லம்மை யார்போல்
பெண்மணி யாக வந்த பெண்ணுக்ஷி அம்மை யுங்கள்
பொன்னடி போற்றி டாத புதல்வரைக் காத்தாள் வாயே.

முக்கணன் முதல்வி போற்ற முன்னுள தெய்வம் போற்ற
அக்கினி சொரூப மாகும் அம்மையுன் கணவ னோடு
எக்குலத் தாரும் பார்க்க இணையிலாத் தெய்வ மான
வக்குவன் மரபில் வந்த வணிகரைக் காத்தாள் வாயே.

வாழி.

அறியயன் அரனும் வாழி! அம்பிகை மைந்தர் வாழி!
பருதிவெண் டிங்கள் வாழி! பாரதி திருவும் வாழி!
பெரியனு யகியும் வாழி! பேர்பெற்ற பெண்ணுட்சி வாழி!
விரிகட லுலகம் காக்கும் வேந்தனும் வாழி தானே! 32

---

## கணேசர் லெக்ஷிமி துதி.

செந்திரு வணைய கோவில் சேர்ந்திடு கணேசர் லெக்ஷிமி
முந்திய துவார பாலர் முதற்பெலி பீடந் தன்னை
வந்தனஞ் செய்து கொண்டு வாழ்த்திய அடியா ருக்கு
சந்ததி பெருகி நாளும் சகலசம் பத்துண் டாமே.

## வீரியப்பெருமாளய்யர் துதி.

ஆரிய அரசர் பின்னோர் அன்புடன் வணங்கு கின்ற
வீரியப் பெருமா ளய்யர் விளங்கிய ஆல யத்தில்
கோரிய காரி யங்கள் குறைவி லாக்கூடு மென்று
சீரிய பெரியோர் சொல்லை சிந்தித்தேன் காத்தாள் வாயே.

### வீரமாமுனி துதி

நாரதர் முனிவர் மற்ற நலம்புகழ் தேவர் வாழும்
பாரத மலைக டோறும் பல தெய்வம் விளங்கு மாபோல்
வீரமா மலையில் வாழும் வீரமா முனியே யென்று
சீருடன் நினைத்த பேர்க்கு செல்வமும் கொடுத்தாள் வாரே.

### பலதேவர் துதி.

பொன்னர்சங் காரண் ணுவி பூசுரர் ராஜா வய்யா
பின்ன லாடசன் ஞசி பெருங்கழு வடியான் சாம்பான்
குன்னுடைக் கவுண்டன் நல்ல குணமுள முனங்கு ராவு
மன்னர் விஸ் வப்ப னுய்க்கர் மந்திரி வணங்குவோமே 4

---

## தென்னூர்

# வீரப்ப சுவாமிபேரில் பதிகம்.

### கணபதி துதி.

ஆரணம் போற்று கின்ற அம்பிகை அரனைப் போற்றி
நாரணன் திருவைப் போற்றி நாமகள் பாதம் போற்றி
கார்நிற வீரப்ப சாமி கர்த்தன்மேற் பதிகம் பாட
காரண ஆதி மூலக் கணபதி காப்புத் தானே.

---

விரிகடல் உலகம் போற்றும் வீரப்ப தேவே உன்னை
அரிஹரி மாலே யென்று அன்புடன் சொன்ன பேர்க்கு
கரிதனைக் காத்த தேபோல் கலியுக காலந் தன்னில்
துரிதமாய் வந்தே காக்குந் தூயனே வந்தாள் வாயே

வல்லவர் புகழ்தென் னூரில் வாந்தரு மூர்த்தி யான
நல்ல வீரப்பா வென்று நாடி ஆலயம்வந் தோற்குச்
செல்வமும் வந்து சேருஞ் சிறப்புள மனை மாண் புண்டாம்
நல்லகா ரியங்கள் சேரும் நாயெனைக் காத்தாள் வாயே.

அல்லிதா மரைசூழ் வாவி அழகுள தென்னூர் வாழும்
நல்லவீ ரப்பா வென்றுன் நற்பதம் பணிந்த பேர்க்கு
வல்லவர் வாழ்த லுண்டாம் வழக்கது வெற்றி யுண்டாம்
நல்லவர் நேச முண்டாம் நாதனே காத்தாள் வாயே.

வீராதி வேந்தர் போற்றும் வீரப்ப மாலே யென்று
மாருது நினைப்போ ருக்கு மடிச்சிலே பெருகி நாளும்
ஏராள மான செல்வம் யிம்மையில் தந்தே யெந்தன்
தீராத மிடிநோய் போக்கி சீர்பெற யெனையாள் வாயே.

நேராத நேர்ந்து யானும் நெய்விளக் கேற்றி வைத்து
மாருது பாடி யானும் மனத்துய ரெல்லாஞ் சொன்னேன்
பாராது போல நீயும் பாராமுக மாயி ருந்தால்
வேறுரு காப்பா ரிந்த வேளைநீ காத்தாள் வாயே.

அருளொடு பொருளி லாது அலைந்திடு மடியே னுக்கு
அருளொடு பொருளுந் தந்து அறிவுள மக்கள் தந்து
பெருகிய செல்வந் தந்து பேர்பெற விளங்கச் செய்து
திருவளர் தென்னூர் வாழுந் தேவனே கொடுத்தாள் வாயே.

அருளாடி யான அன்பர் அரிவாள்மே லேறிக் கொண்டு
குறியது சொல்லும் போது குணமிலாத் துட்டர் கூடிப்
பறியாசம் செய்யும் வஞ்சப் பஞ்சமா பாவி தன்னை
வறிபட அடித் தன் னுனை வாளுலை வாங்கு வாயே.

வையகத் தோர்கொண் டாடும் வாமி பெண் ணுச்சிவாவி
நெய்தலுங் கொட்டி யாம்பல் நிறைந்தவெண் டாம ரைசேர்
மயில்குயில் செங்கா லன்னம் மருவியே கூடி வாழும்
மைவிழி மனையாள் மக்கள் மாந்தரைக் காத்தாள் வாயே.

வேதிய ரரசர் போற்றும் வீரப்ப தேவே யுன்மேல்
போதிய பாடல் சொல்லாப் புன்மொழி நாயேன் சொன்ன
கோதுள பாடல் கேட்டு குற்றத்தைப் பொறுத்தே என்னை
நீதியா யினியெப் போதும் நீங்காமல் காத்தாள் வாயே.

பேர்பெற்ற தேவர் போற்றும் பெருமாமலை தன்னில் வாழும்
கார்பெற்ற வீரப்ப தேவே தமையனைக் காப்ப தோடு
சீர்பெற்ற யிந்நூற் றன்னை சிறப்புடன் விளங்கச் செய்வாய்
ஆர்பெற்ற தென்னூர் வாழும் அண்ணலே அருள்செய் வாயே.

புண்ணியப் புலவர் வாழி புகழ்பெறு மறையோர் வாழி
மண்ணுல குள்ளோர் வாழி மாபெருந் தென்னூர் வாழி
விண்ணுல குள்ளோர் வாழி வீரப்ப சுவாமி வாழி
பண்ணிசை பாடல் வாழி பாவலன் வாழி தானே. (12)



உ

தென்னூர்

# நம்பியப்பர்சுவாமிபேரில் பதிகம்.

## விநாயகர் துதி.

அம்புவி யனைத்து மான அறனறி யபனைப் போற்றி
தம்பிள்ளை யாகக் காத்த தாயுமா னவரைப் போற்றி
நம்பிய அப்பர் சுவாமி நாதன்மேல் பதிகம் பாட
தும்பிமா முகத்தோன் பாதம் துணையடி பணிகு வேனே.

காசினி தன்னில் நல்ல கைக்கோளர் வம்மி சத்தில்
மாசிலா துதித்த நம்பி யப்பனை உனது மைந்தன்
பூசித மாகச் சொல்லரப் புன்கவி தன்னைக் கேட்டு
வசிடா தென்னை நாளும் யின்பமாய்க் காத்தாள் வாயே.

கோவில்கோ புரத்தி லேறி கூரிய வாள்கைக் கொண்டு
தாவிய தசையைக் கொய்து தன்னுயிர் துறந்த பின்பு
தேவியி னருளைப் பெற்று சிறந்த தோர் தெய்வ மாகி
காவுசூழ் தென்னூர் வாழும் கர்த்தனே காத்தாள் வாயே.

அம்பலூ ராச்சி ராம வல்லியா லயத்தில் வாழும்
நம்பிய அப்ப னென்று நற்பெயர் பெற்ற நாதா
கும்பலாய்க் கோடி பேர்கள் கோவில்முன் வந்த பேர்க்கு
அம்பலத் தாடினான் போல் அனைத்தையும் தந்தாள் வாயே.

நம்பின பேர்களுக்கு நம்பிய அப்ப னென்றும்
நம்பாத பேர்களுக்கு வம்புசெய் விப்பா யென்று
நம்புவி யோர்கள் சொல்லும் நன்மொழிக் கிணங்கி யானும்
நம்பினேன் யெனக்கு நாளும் நற்றிடம் அருள்செய் வாயே.

குமாரசா மியைப்போல் நாளும் குவலயம் விளங்கு கின்ற
குமாரலிங் கய்யா வென்று கோரியே வந்துன் பேரால்
சமாரா தனைகள் செய்து சார்ந்தடி பணிந்த பேர்க்கு
எமராசன் வராது காத்து யெந்தனைக் காத்தர்ள் வாயே.

பத்தனும் பழனி செட்டி பாட்டன்முன் பாட்டன் முன்னே
சித்தர்போல் வந்த நம்பி யப்பனே சிறந்த தேவே
நத்திய அடியா ருக்கு நாடிய் செல்வம் தந்து
பத்தியா யுன்னைப் பாடும் பாலனைக் காத்தாள் வாயே.

தென்னூரில் வந்த மூர்த்தி தேவனே நம்பி யப்பா
நன்மையாய் உன்னை வேண்டி நாடிய அடியா ரெல்லாம்
எண்ணிய காரியங்கள் யின்பமாய் தரவே வேண்டி
வன்னிமேல் வாழ் பெண் ணாக்ஷி மைந்தரைக் காத்தாள் வாயே

உன்னுடக் கிருபை யாலே உலகத்தி லுள்ள பேர்கள்
மன்னர்போற் செல்வம் பெற்று மதியுள மக்கள் பெற்று
கண்ணயம் பெற்ற பேர்கள் கணக்கிலை யென்றார் முன்னோர்
நன்மணி நம்பி யப்ப நாதனே காத்தாள் வாயே

பிணஞ்சுடு காட்டி லாடும் பித்தனும் பெம்மா னைப்போல்
பனங்காட்டி லாடுகின்ற பைராவி நம்பி யப்பா
வணங்கிடாப் பேர்க டன்னை வணங்கிடச் செய்து நாளும்
மணங்காட் டுந் தென்னூர் வந்த மைந்தரைக் காத்தாள் வாயே.

இருபத்தொன் பதரைக் கிராமத் திருந்திடும் வணிகர் போற்றும்
அருமையா முப்பத் திரெண்டென் ஆலயம் தனைத்தி னுள்ளும்
பெருமை சேர் தென்னூர் தன்னில் பெருமைபாய் விளங்குகின்ற
தருமலிங் கப்பா நம்பி யப்பனே காத்தாள் வாயே.

சுத்திடுங் கடல் சூழ் நாட்டுள் சனம்பெரு வணிகருக்கு
மத்திசம் செய்ய வந்த மாதவ நம்பி யப்பா
பத்தி யில்லாத நாயேன் பாடிய கவியிற் கோது
எத்தனை இருந்த போதும் எளியனைக் காத்தாள் வாயே.

சந்த விருத்தம்.

உம்பர்வாழி! உலகம்வாழி! உயர்ந்த கற்பு மாதர் வாழி!
தும்புரு நாரதரும்வாழி! தூய்மை யுள்ள ஞானி வாழி!
அன்பர்வாழி! அடியர்வாழி! அவனி யாளும் அரசர் வாழி!
நம்பியப்ப சுவாமிவாழி! நாதர் வாழி! வாழி வாழியே! (13)

---

தென்னூர்

# மதுரைவீரசாமி பதிகம்.

---

விநாயகர் துதி.

மதுரையை நினைத்த போதே மனமது குளிரு மென்னு
முதுமொழிப் புலவர் சொன்ன முன்னுள கதையைப் போல
மதுரை வாழ் மதுரைவீர சுவாமிமேற் பதிகம் பாட
மதுரையா ளுமையாள் பெற்ற மதகரி காப்புத் தானே.

காசிரா ஜாவின் மைந்தா கானகந் தன்னி லுன்னை
ஆசையால் எடுத்து வந்து அருமையாய் வளர்த்த சின்னான்
நேசன் பொம் மண நாயக்கன் நேரிளே காவலுக்கு
வாசமாய்ச் சென்ற வீரா வந்தெனைக் காத்தாள் வாயே.

மாதியச் சின்னான் சொல்லே மகிழ்ச்சியாய் மனதிற் கொண்டு
பாதிராப் போதில் சென்று பயமிலா குடிசை காத்து
கோதிலாப் பொம்மி மாதைக் குலாவியே கூடிச் சேர்ந்த
சாதுவே மதுரை வீர சுவாமியே எனைக்காப் பாயே.

போர்வீரர் வேடம் பூண்டு பொம்மியைச் சிறைகொண் டேக
வார்குலத் தார்க ளுன்னை வழிமறித் திட்ட போது
நேர்நின்று யுத்தம் பண்ணி நேரிலார் சிர மறுத்த
பேர்பெற்ற மதுரை வீரன் பெருமையென் சொல்வன் மாதோ.

திருச்சிராப் பள்ளி மற்ற தேயங்கள் தன்னில் வாழும்
கருச்சிலைக் கள்ளர் தம்மைக் கருவறுத் திட்ட பின்னால்
திருமலை நாய்க்க ராண்ட திருநகர் மதுரை வந்த
பெருமையைச் சொல்ல வந்த பிள்ளையைக் காத்தாள் வாயே.

ஈனர்கள் குடிசை சென்று இன்புற்றே வளர்ந்து நாளும்
கானவே டுவனைப் போலக் கன்னிமா ரிருவ ரோடு
மோனமுத் தமிழ்சேர் சங்க முற்றிய மதுரை மேலாம்
வானவர் புகழ் தென்னூரில் வந்தெனைக் காத்தாள் வாயே.

கம்மியர் கனத்தோர் செய்த கனகமாம் கோவில் பெற்று
பொம்பிவெள்ளை யம்மாள் தோளைப்பொருந்திய மதுரைவீரா
அம்மை மீனாட்சி சொக்கர் ஆணையின்படியேயாண்ட
எம்மையாள் மதுரை வீரா யேழையைக் காத்தாள் வாயே.

புதுமணக் கோல முள்ள பொற்பமை அழகு வாய்ந்த
மதுரைவீ ரயனே யென்று மனதினில் நினைத்த பேர்க்கு
குதூகல மாக நாளுங் குபேரசம் பத்துண் டாக
இதுதருணந் தானய்யா யெந்தனைக் காத்தாள்வாயே.

காசிமா நகரை யாண்ட காவலன் மைந்த னான
மாசிலா மதுரைவீரா மன மிக விரங்கி யென்மேல்
தேசிக வாழ்வு தந்து சிறியனைப் பாது காத்து
ஆசிகள் பலவுங் கூறி அடியனைக் காத்தாள் வாயே.

எத்தனை கோடி பேர்க்கிங் யிணையிலாச் செல்வந் தந்து
புத்திரப் பேறுந் தந்தாய் புகழுள மதுரை வீரா
நத்தியே யுன்னைப் பாடும் நாயினுங் கடையே னுக்கு
புத்திசேர் மக்கள் தந்து புகழொடு வாழ்விப் பாயே.

மாடிசூழ் தென்னூர் வாழும் மாபெரு மதுரை வீரா
கோடி பேர் தங்களுக்கு குலதெய்வ மாகி யெங்கும்
நாடிய பேர்க ளுக்கு நற்றுணை யாக வந்தாய்
பாடிய அடியாருக்கு பல னெலாம் கொடுத்தாள் வாயே.

காசியில் பிறந்து நல்ல கன்னியா குமரி மற்ற
தேசமே போற்று கின்ற சிறந்ததோர் தெய்வ மாகி
மாசிலா மதுரை தன்னில் மாபெருங் கோவில் கொண்டு
ஆசைநா யகியாளோடு அடியனைக் காத்தாள் வாயே.

கள்ளுச்சா ராயங் கஞ்சா கனத்தலா கிரிசூட் டானும்
வள்ளத்தே வைக்க உண்ணும் வாகுசேர் மதுரை வீரா
கள்ளரைக் கடிந்து கொன்று கம்பள மாதைச் சேர்ந்த
வள்ளலே யெங்கள் வம்சம் வளர்ந்திடச் செய்கு வாயே.

விரிகட லுலகங் காக்கும் வேந்தனே மதுரை வீரா
சிறியன்சொற் பாட லெல்லாம் சிறப்பிலா திருந்த போது
பிரியமாய்ப் பிழை பொறுத்து பேர்பெற விளங்கச் செய்து
நெறியுள தென்னூர் வாழும் நிருபனே காத்தாள் வாயே.

பிறையணி யீசன் வாழி! பேர்பெற்ற அடியார் வாழி!
மறைபுகழ் தென்னூர் வாழி! மதுரைவீ ரயனே வாழி!
முறைதெரி மன்னர் வாழி! மூவுல கத்தோர் வாழி!
நிறைபெறு வணிகர் வாழி! நீடூழி வாழி! வாழி!. 15

---

தென்னூர்

# மலையாள முத்தையாபேரில் பதிகம்.

## விநாயகர் துதி.

கலைமகள் பாதம் போற்றி! கவியருள் முருகன் போற்றி!
மலைமகள் பாதம் போற்றி! மலைமுனி பாதம் போற்றி!
மலையாள முத்தை யாமேல் மாபெரும் பதிகம் பாட
கலையெலாம் தெரிந்த ஞானக் கணபதி துணைய தாமே.

சிங்கார மான தென்னூர் சிறந்தபெண் ணாக்ஷி கோவில்
மங்காது வாழ்க நாளும்! மலையாளி யென்றுன் பாதம்
எங்கேனும் நினைப்பே னப்போ யென்மீது கிருபை செய்து
அங்கேநீ வந்து யென்னை அன்புடன் காத்தாள் வாயே

மந்திரங் கற்றோர் வாழும் மலையாள தேயம் விட்டு
எங்கள்முன் னோர்கள் கூட தென்னூரில் வந்த மூர்த்தி
துங்கமாம் கோவில் பெற்று துட்டரை யடக்கி நாளும்
மங்களக் கோல முள்ள மலையாள முத்தை யாவே

முத்தய்யா வென்று நித்தம் பத்தியாய்ப் பாடும் நல்ல
உத்தம குணத்தோ ரான நத்தமா நகரார் மற்ற
எத்திசை யோரும் கேட்க வின்பமாய் படித்த பேர்க்கு
புத்திரப் பேறுந் தந்து புகழுடன் வாழ்விப் பாயே

வங்காளம் பம்பாய் சென்னை வளம்பெறு நகரி லுள்ள
தங்கம் பொன் வெள்ளி மோரு நவமணி கொண்டு விற்று
எங்கள் முன் னோர் களுக்கே இணையிலா லாபந் தந்தாய்
தங்கம் பொன் தனலா பங்கள் தனைய னுக் கருள் செய்வாயே

உலைவாயின் மெழுகாய் நொந்து உருகிய அடியா ரெல்லாம்
மலையாளி யென்றுன் பாதம் மலரடி தியானித் தோர்க்கு
கொலையொடு களவு சூது கோழுழை யாது நித்தம்
கலைதெரி புத்திர செல்வம் கருணையாய்க் கொடுத்தாள் வாயே

வலையகப் பட்ட மான்போல் வாடியே மனந்து டித்து
நிலையிலா தலைந்தென் னுளும் நினைவிலா நாயே னுக்கு
மலையென வந்த நோய்கள் பனியெனப் போகச் செய்வாய்
மலைநிகர் முத்தய் யாவே மைந்தனைக் காத்தாள் வாயே

விலையுயர் முத்தய் யாவே வேண்டினே னொருவின் னட்பம்
மலைநிகர் தோளை யுள்ள மந்திர வாதி யென்னை
கொலைசெய வேண்டு மென்று கூறிய கொடியோன் றன்னை
நிலையிலா தடித்தன் னோனை நிமிடத்திற் கொல்லுவாயே

வஞ்சனை பில்லி யேவல் வைத்திடும் பேர்க டன்னை
நெஞ்சகம் பிழக்கத் தாக்கி நிணத்தொடு மூளை சிந்த
அஞ்சிட அடித்துக் குத்தி அவ னுயிர் போகச் செய்வாய்
மஞ்சுசூழ் தென் னூர் வாழும் மலையாள முத் தய் யாவே

கெதிபொரு ளுள்ளோ ரென்னைக் கேவல மாகப் பேசும்
மதியிலா யீனருக்கு மாலை கர் மாலை சூலை
அதிரோகத் தாலே வாட்டி அவ னுயிர் போகச் செய்வாய்
நதிமேவு தென்னூர் வாழும் நாதனே முத்தய் யாவே

என்னை யெண்ணாது பேசி யென் னுட னெதிர்த்த பேரை
சின்ன பின் னங்க ளாகச் சீரழித் திட்டன் னோனை
மன்னனை நெறித்துக் கொன்று மானமில் லாது போக்கி
மண்ணினில் மறையச் செய்வாய் மலையாள முத்தய் யாவே

முறைகெட வார்த்தை பேசும் மூர்க்கனை முனைவாள் கொண்டு
நிறையிலா நெஞ்சைக் கீறி நிணத்தொடு ரெத்தஞ் சிந்த
தரைதனில் தேய்த்தன் னேனை தலைதனைத் திருகிக் கொன்று
திறைபெறி நரகிற் றள்ளி தீக்கிரை யாக்கு வாயே

அலக்கழி வாக யென்னை அவதூறு பேசி னோரை
உலக்கைகொண் டடித்தன்னோனைஉயிர்தனைப்போக்கவேண்டும்
சிலைக்காக கொண்டெழுந்த வீரா சிரிபன்சொற் பாடல்கேட்டு
கலக்கமில் லாம லென்னை கருணையாய் காத்தாள் வாயே

விண்மணி போல நாளும் விளங்கிய மன்னர் போற்றும்
மண்புகழ் தென்னூர் வாழும் மலையாளி யுந்தன் மீது
பண்ணிசை யோடு சொல்லாப் பாடலின் பிழைபொ றுத்தே
எண்ணிய காரி யங்கள் எனக்கருள் செய்கு வாயே

கலைமகள் நேயம் பெற்ற கவிவாணர் வாழி தென்னூர்
மலையாளி வாழி மற்ற மகிமைசேர் தெய்வம் வாழி
மலைநிக றைந்து கோத்ர மாபெரும் வணிகர் வாழி
நிலையுள தெல்லாம் வாழி நீடூழி வாழி தானே 15

---

## கலித்துறை.

---

### பருத்திக்குடைய மகரிஷி.

கருத்தில் நினைத்த படியே கொடுக்கின்ற கற்பகம் போல்
மறுத்தே யுரையாத மன்னவ சேயிந்த மாநிலத்தில்
விருத்தியார் செய்தார் பெண் ணாக்ஷிதன் கோவில் விளங்கிடுசீர்
பருத்திக் குடைய மகரிஷி கோத்திரம் பார்த் தருளே.

### தென்னவராய மகரிஷி

மன்னாதி மன்னரும் வானோர் களும்புகழ் மாநிலத்தில்
உன்னீத மான உயர்கோவில் சுத்திரம் ஓங்கவமை
தென்னவ ராய மகரிஷி கோத்திரச் சீருடையோர்
மன்னவர் மந்திரி தங்களைக் காத்தருள் மாதவனே.

## பைராகிழவமகரிஷி.

கைலாச நாதன் றிசைநான் முகன் விண்டு காண்முருகன்
இராணி கேள்வன் அணிபுவி யோரும் அவாக் கொளுஞ்சீர்
பைரா கிழவ மகரிஷி கோத்திரப் பண்புடையோர்
மெய்லாக வந்துன் றிருவடி போற்றுவர் மேன்மை செய்யே

## மாத்துடைய மகரிஷி

பூத்துச் சொரிகின்ற பொன்மலர் போலப் பொலிந் திலங்கும்
சாத்துதற் கேற்ற தாளம்பொன் னுடைநற் சந்த ராரம்
சேர்த்துக் கொடுப்பர் பெண் ணாக்ஷியா மம்மனின் சேவடிக்கே
மாத்துடை யான மகரிஷி கோத்திரங் காத் தருளே.

## பாக்கமுடையமகரிஷி.

கோக்கள் புகழுங் குணமே படைத்த குடிப் பிறந்தார்
ஊக்க முளோரென யாரும் புகழும் உறுதியு ளார்
வாக்கருள் வார்பால் வரம்பெற வந்தவர் வாய்மை யுள்ள
பாக்க முடைய மகரிஷி கோத்திரம் பார்த் தருளே.

## கோவிலுண்டான காலம்.

மன்னர்விஸ் வப்ப நாய்க்கர் மன்னர்முன் சோழன் காலம்
தென்னூரைச் சேர்ந்த மற்ற தேயங்க ளாளும் போது
தன்மைசேர் வணிகர் வம்மிசம் தழைந்திட வேண்டு மென்று
அன்னவ ரமைக்கச் சொன்ன ஆலயம் அழகாய்த் தானே.

அழகுசே ரால யத்தில் அமைந்ததோர் தெய்வந் தன்னை
உளந்தனில் தெரிந்த மேலோ ருரைப்படி யுலகத் தோர்க்கு
விளம்பிய பாடல் சொன்ன வீரியப் பெருமா ளுக்கு
வளம்பெரு மக்கள் செல்வம் வாழ்வெலாங் கொடுத்தாள் வாயே.

## தேப்பக்குளத்தின் பெருமை.

அரியனு முதலி மந்திரி அரசர்முன் அரசர் காலம்
திரிசிர புரத்தைச் சேர்ந்த தென்னூர் தெப்பக் குளத்தை
பெரியனு யகிபெண் ணாக்ஷி பேர்பெற விளங்க வேண்டி
தெரியவே வணிகர் செய்த சிறப்பையென் சொல்வன் மாதோ.

கோதாவிரி நதிக்கொப் பான குளத்தினி தீர்த்த மாடி
மாதாபிதா குருதெய் வத்தை மனதினில் றியானஞ் செய்து
பாதார விந்தம் போற்றி பல பல தர்மஞ் செய்யும்
மேதாவி யான பேரை மேன்மையாய் காத்தாள் வாயே.

### திருவாச்சியின் சிறப்பு.

இருள்தனை விலக்கு தற்கு ஏற்றதோர் கருவி யாகும்
திருவாச்சி செய்து வைத்து தீபமே யேத்தி னோர்கள்
கருவினிற் புகுதா ரென்று கழறினர் புலவர் முன்னம்
திருநிறை தென்னா ரானே தேவனே காத்தாள் வாயே.

### பனைமரச் சிறப்பு.

பெரும்பூசை செய்ய வென்று பேர்பெற்ற பெரியோர் கூடி
பரும்பனை மரத்தில் வாழும் பல்லிவாய்ச் சகுனங் கேட்க
விரும்பிய பேர்க ளுக்கு வேண்டிய வண்ணஞ் சொல்லும்
அரும்புகழ் தரும்வீ ரப்பா அடியனுக் கருள்செய் வாயே.

### கோவில் பூசகர்பேரில்.

வானவர் புகழ்பெண் ணாச்சி மற்றதே வதிக்கென் னாளும்
ஞானமாம் கொழுந்தைப் பெற்ற நவில்தா தாதை முன்னோர்
ஆனவர் பின்னோர் முன்னோர் அன்புடன் பூசை செய்யும்
மானவர் மக்கள் பேரன் மகன் மகன் தனைக் காப்பாயே.

### படித்தரம் வைத்தவர்பேரில்.

குலமிக விளங்க வேண்டி கோவிலைச் செய்து வைத்து
பலபடித் தரங்கள் வைத்துப் பல்லுயிர் ஓம்பி நித்தம்
நலமிகச் செய்து வாழும் நல்லவர் கிளைக ளெல்லாம்
அலர்கதிர் திங்கள் போல அவனியில் வாழ்கு வாரே

## ஆடி மாதம் கோவில் வருவோர் பேரால்.

ஆடிமா தங்க டோறும் அன்றுபதி னெட்டாந் தேதி
தேடியா லயமே வந்தன் றிருவடி பணிந்த பேர்க்கு
நாடிய பொருளும் வீடும் நஞ்சைபுஞ் சைசக ளுண்டாக
பாடிய அடியார்க் கின்பப் பாலனும் கொடுத்தாள் வாயே.

## மாசி மாதம் சிவன் ராத்திரி கோவில் வருவோர் பேரால்.

காசிமா நகரஞ் சென்று கங்கைநீ ராடினற் போல்
மாசிமா தங்கடோறும் மாசிவ ராத்திரி வந்து
தேசுள தென்னூர்த் தெப்பக் குளத்திநீ ராடி பூசி
கூசாது பாடுவோர்கள் குல மெலாம் காத்தாள் வாயே.

## சுவாமி ஆடுவோரிடம் வரம்பெறல்.

கற்றவர் கற்றி லாதார் களிப்புடன் வந்து கூடி
உற்றநல் லுறவு காட்டி உண்மையாய் ஒன்று கூடி
நற்றரு ளாடிபாதம் நத்தியே நல்ல வாக்கு
பெற்றவர் பெருமை வாய்ந்த பெருஞ் செல்வம் பெற்றபேரே.

## வருடாவருடம் கோவில்வருவோர்பேரில்.

பெரும் புகழ் பெற்றநல்ல பெண்ணச்சி கோவி லுக்குள்
வரும் வரும் வருடந்தோறும் வருமாடி மாசி தோறும்
வருகிற பேர்க ளுக்கு வாசவன் சீத ரணைப்போல
பெருஞ்செல்வம் பெற்றுவாழ்வர் பெருமையென் சொல்வன் மாதோ

## பெரும்பூசை செய்வோர்பேரில்.

கன்னலும் சென்ன லோங்கும் காவிரி ஆற்றின் தென்பால்
தென்னூரில் விளங்குகின்ற தேவி பெண் ணாட்சி கோவில்
பின்னமில்லாது நல்ல பெரும் பூசை செய்த பேர்கள்
மன்னர்போல் செல்வம் பெற்று மகிழ்ச்சியாய் வாழ்கு வாரே.

## கரகம் ஆற்றில் அலங்கரித்தல்

காவிரி நதிக்குச் சென்று கங்கையிற் றீர்த்த மாடி
காவேரி யம்மாளுக்கு கனி பல பூசை செய்து
நாவினுற் பாடல் சொல்லி நற் றருமங்கள் செய்து
வாவிசூழ் பெண் ணுட்சிகோவில் வருகுவோம் வாரீர் மாதே.

குடமுருட்டி யதோ ராற்றில் கோலமாங் கரகந் தன்னை
அடைவுடன் அலங் கரித்து அன்புடன் பூசை செய்து
குடந்தனில் நீரை மொண்டு கோதிலா விளக்கிற் பெய்து
திடமுடன் தீபமேற்றி தென் னூரில்வாழ் கோவில் வந்தார்.

கோவிலில் வந்து கூடி குணமுள்ள பெரியோ ரெல்லாம்
தேவிசீர் பாதம் போற்றி சிறப்புள தீப தூபம்
நேவித்தியஞ் செய்து போற்றி நிறைபெறு விபூதி பெற்று
வாவின் சூழ் பக்க மெல்லாம் வணங்கியே வாழ்த்தினுரே.

ஊக்கமா யுறுதியாக வொரு மன துடை யராகக்
காக்கவேண்டுமென் றெல்லோருங் கருதியே யடி பணிந்து
வாக்கது பெற்றுக் கொண்டு மாந்தரு மங்கை மாரும்
நீக்கமில் லாதிருக்கும் நேசரைக் காத்தாள் வாயே.

செந்திரு கிருபை யாலே சிறந்த தோர் செல்வம் பெற்று
சொந்தமாங் கிளைக டன்னைச் சூழவே யிருக்கச் செய்து
வந்தநல் விருந்தை யோம்பி வருவிருந் தெதிரே பார்க்கும்
சந்ததி பெருகச் செய்வாய் சர்வேஸ்வரி காத்தாள் வாயே.

## ஜெயகண்டி அடிக்கும் சேயர்பேரில்

நாகலோ கத்தா ரெல்லாம் நாளுமே போற்று கின்ற
மேகஞ்சூழ் மாட மேடை மேன்மைசேர் தென்னூர் தன்னில்
ஆகம விதிப்படிக்கு அமைத்தவா லயத்தில் நாளும்
ஜெயகண்டி அடிக்கும் நல்ல சேயரைக் காத்தாள் வாயே.

## ஆலாச்சி மணி அடிக்கிறவர்பேரில்

மோலாச்சி பெற்று வாழும் மீனாட்சி சொக்க நாதர்
ஆலாச்சி சேத்திரம் வாழ் அன்புள சிவந்தி செட்டி
மாலாகச் செய்து வைத்த மதிப்புள மணிசே வைநூர்
ஆலாச்சி மணிய டிக்கும் அன்பரைக் காத்தாள் வாயே.

## பணிதிபாத்திரம் செய்தவர்கள்.

கந்தமார் தென்னூர் வாழும் கற்புள பெண்ணுச் சிதாய்க்கு
முந்தையோர் செய்து வைத்த முன்னுள பணிதி பாத்திரம்
சொந்தமாம் பணிதி போல சொந்தத்தில் ரிப்பேர் செய்தோர்
சந்ததி பெற்று வாழ்க சற்குணி காத்தாள் வாயே.

அன்பினு லுரைத்த பாட லனுதினம் படித்த பேர்க்கு
நன்மையே வந்து சேரும் நாளெலாம் ராஜ யோகம்
உண்பது முடிக்கை சேரும் உணர்வுள கல்வி சேரும்
நன்மொழி யாகக் கொண்டு நாளுமே போற்று வீரே.

போற்றுவீ ரென்னை யிந்தப் பூதல முள்ள நாளும்
மாற்றுயர் தங்கந் தன்னை மதிப்பவர் மதியுள் ளோர்போல்
ஆற்றலுள் ளோர்க ளென்னை அறிவினு லறிந்து கொள்வார்
சாற்றுவோ வார்த்தை சொல்வர் சற்குண மிலாதார் தாமே.

## கோவில் ராஜா மந்திரி குடிகள்பேரில்.

காவிரி நாட்டை யாண்ட காவலன் சோழ ராஜன்
வாவிசூழ் தென்னூர் வாழும் வாமிபெண் ணுக்ஷி யம்மன்
கோவில்மா னேஜர் மந்திரி குணம்பெறு குடிக ளெல்லாம்
பூவுல குள்ள நாளும் பொருந்தியே வாழ்கு வாரே.

## மாமன் மைத்துனர் பேரில்

---

அஞ்சுகோத் திரத்தைச் சேர்ந்த அன்புள மச்சான் மாமன்
கொஞ்சிய குழந்தை கோதை குழுவொடு கோவில் வந்தால்
அஞ்சலென் றாத ரித்து அவரவர் வேண்டு செல்வம்
ரஞ்சித மாகத் தந்து நாளுமே காத்தாள் வாயே.

## அரங்கேற்றுவார் பேரில்.

---

பற்பலர் புகழும் பாலக் கரையில்வாழ் மானா மூனா
தற்பரன் முத்துச் சாமி செட்டியார் தனய ரான
நற்புகழ் பொன்னுச் சாமி நாதன்வேள் துரைச்சாமி வள்ளல்
அற்புத பெண் ணாக்ஷிமாலை அவையரங் கேற்றி னாரே

பற்பல நாளும் நாடி பபன்பெறு சொல்லைத் தேடி
கற்றவர் கல்லார் கற்க கனம்பெறு அச்சி லேற்றி
பொற்பமை அழகு வாய்ந்த புத்தக ரூபஞ் செய்து
நற்புக ழோங்க வீந்த நற்றுரைச் சாமி வேளே.

---

## வாழ்த்து கவி.

---

அருமறை முனிவர் வாழ்க! ஆனினம் வாழ்க! தெண்ணீர்
விரிதிரை யுலகங் காக்கும் விறல்கெழு வேந்தன் வாழ்க!
மருவிய திங்க டோறும் மழைவளஞ் சுரக்க நாளும்
பொருவற மொழிந்த பாடல் பொற்பொடு பொலிக மாதோ.!

ஆக கவி **133**. (33)

முற்றிற்று.